*Nam nāṭu*

*Malar 3, itaḻ 92*

*September 30, 1955*

Record no. 1131

REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE : [redacted]

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: புரட்டாசி 14உ வெள்ளி (30—9—55) ★ ★ வெளியூர் : புரட்டாசி 15உ சனி (1—10—55) [இதழ் 92

## மைசூர் போலீசார் 'உஷார்'!

பெங்களூர், செப். 29—

மாநில புனரமைப்புக் குழுவின் அறிக்கை அண்மையில் வெளியிடப்படவிருப்பதை ஒட்டி எல்லா மாவட்டப் போலீசாரும் விழிப்புடனிருக்குமாறு மைசூர் சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனராம்!

பெல்லாரியில் உள்ள ஆயுதப் போலீசாரின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டிருக்கிறது என்றும், பெல்லாரி மைசூருடன் இணைக்கப்பட்டதிலிருந்து, அங்குள்ள ஆந்திரர்கள் திரும்பவும், பெல்லாரியை ஆந்திரத்துடன் இணைக்கக் கோரி வருகின்றனர்

(4-ம் பக்கம் பார்க்க)

# இந்தியக் கைத்தறித் தொழிலுக்கு ஆபத்து?

## அமெரிக்கர் ஊடுருவுகின்றனர்!

### பம்பாயில் தொழிற்சாலை நிறுவ 'முஸ்தீபு'

இந்தியக் கைத்தறித் தொழிலுக்கு 'ஆபத்து' வந்திருக்கிறதா?

'இந்தியாவின் கைத்தறி நெசவுத் தொழிலில் அமெரிக்கர் ஊடுருவுகின்றனர் என்ற செய்தி மேலே கண்ட கேள்வியை எழுப்புகிறது.

அமெரிக்க உடைத் தயாரிப்பாளரான மார்டின் கோல் என்பார், வரும் திங்களில் பம்பாய் வந்து, உள்ளூரில் உள்ள தொழிலாளர்களையும், அவர்களது கைத்தறி நெசவுத் தொழில் திறமையையும் பயன்படுத்தி, இரண்டு புதிய தொழிற்சாலைகளைத் துவக்கப்போவதாக நியூயார்க் நகரிலிருந்து கிடைக்கிற செய்தி ஒன்று கூறுகிறது.

55 வயதான மார்டின் கோல், இந்தியக் கைத்தறி நெசவாளரைக் கொண்டு துணி நெய்து, அமெரிக்காவுக்கு அவற்றை ஏற்றுமதி செய்வார் என்றும், அங்கு, அந்தத் துணிகள் உடைகளாக மாற்றப்பட்டு, 'மார்க்கெட்'டிற்குச் செல்லும் என்றும் தெரியவருகிறது.

மேலும், அமெரிக்க 'மார்க்கெட்'டிற்காக அவர் இந்தியப் பருத்தியாலான, 'செருப்பு'களும் தயாரித்து அனுப்புவார் என்றும் கூறப்படுகிறது.

அமெரிக்க சில்லறை விற்பனையாளரான ஹெரால்டு, சாமுவேல் என்பாரின் துணையுடன், தனது தொழிலின் தலைமை நிலையத்தை பம்பாய் நகரில் நிறுவுவார் என்றும், புதுடில்லி, காசி ஆகிய இரு நகரங்களிலும், 'நாகரீக ஆராய்ச்சி நிலையம்' என்ற பெயரில், கிளை அலுவலகங்கள் திறப்பார் என்றும் கூறப்படுகிறது.

## டாமன் கவர்னர்

### பதவியிலிருந்து விலக்கப்பட்டார்

போர்ச்சுகீசிய சர்க்கார், டாமன் கவர்னரைப் பதவியிலிருந்து விலக்கிவிட்டதாம்; லிஸ்பன் நோக்கி அவர் சென்றுகொண்டிருக்கிறாராம்!

கோவாவில், ஆக. 15-ந் தேதி அன்று நடைபெற்ற சத்தியாக்கிரகத்திற்கு அவர் அனுதாபம் காட்டியதாகக் கருதப்பட்டுள்ளதாம்.

## பெரான் எங்கே?

பியூனஸ் அயர்ஸ், செப். 29—

துரத்தப்பட்ட பெரான், இப்போது படகு ஒன்றின் மூலம் ஸ்பெயின் நாட்டிற்குப் போய்க் கொண்டிருக்கிறாராம்.

அவர் பராகுவே நாட்டுத் தலைநகரான அசன்சியன் நகருக்குச் செல்லப் போவதாக முன்பு கூறப்பட்டது.

அர்ஜெண்டைனாவின் வெளி விவகார இலாகா புதிய மந்திரி, பெரான் விமானம் மூலம் ஸ்பெயின் போய்விட்டார் என்று கூறப்பட்டதை மறுத்திருக்கிறார்.

## இலங்கை திராவிடர் மீது மற்றோர் பேரிடி!

### கொத்தலாவலை சர்க்காரின் புதிய உத்தரவு

கொழும்பு, செப். 29—

இலங்கைவாழ் திராவிடரின் இன்னல்கள் வளர்ந்துகொண்டே வருகின்றன; இப்போது இலங்கைசர்க்கார் பிறப்பித்துள்ள புதிய உத்தரவு ஒன்று அவர்களுக்கு மற்றொரு பேரிடியாக அமைந்திருக்கிறது.

'நாடற்றவர்கள்' என்று வர்ணிக்கப்படுகிற இலங்கை திராவிடரை நம்பியுள்ள 'இந்தியா'வில் வாழும் அவர்களது உறவினர்கள், இலங்கை வர 'விசா'க்கள் தருவதற்கு மறுக்கப்படும் என்று இலங்கை சர்க்கார் புதியதொரு உத்தரவு பிறப்பித்திருக்கின்றனராம்.

'நாடற்றவர்கள்' என்று வர்ணிக்கப்படுவோரில் பலர், இலங்கைக் குடி உரிமை கோரி மனுச் செய்திருக்கின்றனர்; சிலருக்கு ஏற்கனவே 'குடி உரிமை' மறுக்கப்பட்டுவிட்டது.

இலங்கையிலிருந்து வெளிவரும் 'சிலோன் டைம்ஸ்' பத்திரிகையின் கருத்துப்படி இந்த, உத்தரவு, நாடற்றவர்கள், இலங்கையில் நிரந்தரப் பாத்தியதை கொண்டாடாமல் தடுப்பதற்காகவே பிறப்பிக்கப்பட்டிருக்கிறதாம்!

## இப்போது தடுக்கப்படுகிற கோவா சத்தியாக்கிரகம்

### ம. சோ. தலைவருக்கு 10 ஆண்டு கடுங்காவல்

பெல்காம், செப். 29—

கடந்த மே. 18-ந் தேதியன்று கோவாவிற்குள் சென்ற முதல் சத்தியாக்கிரகக் 'கோஷ்டி'யை அழைத்துச் சென்ற ம. சோ. கட்சி தலைவரான ஏ. ஜி. கோரே, கோவா பிராந்திய இராணுவ நீதிமன்றத்தினரால் 10 ஆண்டு கடுங்காவல் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டாராம்!

மேலும், தினம் 50 'எஸ்கிடோஸ்' வீதம் இரண்டாண்டுகளுக்கு அவர் தொடர்ந்து அபராதம் கட்டவேண்டும் என்று தீர்ப்பளிக்கப்பட்டதாம். (1,000 'எஸ்கிடோஸ்' ரூ. 169-க்குச் சமமாகும்.)

தண்டனைக் காலம் முடிந்ததும், கோரே, கோவாவிலிருந்து நாடு கடத்தப்படுவாராம்!

## தீண்டாமை ஒழிப்புச் சுவரொட்டிகள்

### திரும்பப்பெற்ற கோழைத்தனத்திற்குச் சர்க்காரின் நொண்டிச் சமாதானம்

சென்னை, செப். 29—

"சமூகத்தின் ஒரு பிரிவினரின் உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்க வேண்டிய கடமை சர்க்காருக்கு இருக்கிறது;

"தீண்டாமை ஒழிப்பை ஒட்டி, சர்க்கார் வெளியிட்ட சுவரொட்டிகளுக்கு சில எதிர்ப்புகள் எழுப்பப்பட்டன; சர்க்கார் எல்லா மக்களின் பிரதிநிதி என்ற வகையில், எதிர்ப்பு எழுப்புகிற சமூகத்தின் ஒரு பிரிவினர் என்ன சொல்கின்றனர் என்பதையும், நாம் கணக்கில் எடுத்துக் கொண்டாக வேண்டும்; இப்போது இது முடிவாகிவிட்ட விஷயம்; தொடர்ந்து அது பற்றிப் பேசுவது அவசியமில்லாதது,"

—என்று, சட்டசபையில் நிதி மந்திரி சுப்பிரமணியம் தெரிவித்திருக்கிறார்.

தீண்டாமை எதிர்ப்பு சுவரொட்டி சர்க்காரால் திரும்பப் பெறப்பட்டதுபற்றி இன்று சட்டசபையில் தோழர் பி. ரெங்கசாமி அவர்களால் கேள்வி கேட்கப்பட்டது.

பதிலளித்த மந்திரி பி. பரமேசுவரன் சொன்னார்:—

"தீண்டாமை கடைப்பிடிப்பது அரசியல் சட்ட 17-வது விதிப்படி தண்டனைக்குரிய குற்றம்,' என்று விளக்குகிற 30,125 சுவரொட்டிகள் ரூ 5,000 செலவில் அச்சிடப்பட்டன; அந்தச் சுவரொட்டிகளை ஆதரித்தும், எதிர்த்தும் பத்திரிகைகள், தனிப்பட்டவர்கள், இயக்கங்கள் எல்லாம் கருத்தறிவித்தன;

"எந்த ஒரு பகுதி மக்களின் மனதைப் புண்படுத்த வேண்டுமென்பதோ, அல்லது விரும்பத்தகாத தகராறைக் கிளப்பவேண்டுமென்பதோ அல்ல—சர்க்கார் அந்த சுவரொட்டி வெளியிட்டதின் நோக்கம்; எனவேதான், தொடர்ந்து அந்த சுவரொட்டிகள் விளம்பரப்படுத்தப்படுவது நிறுத்தப்பட்டது; வெளியிடப்படுமுன், தாழ்த்தப்பட்டோர் நல இலாகா சர்க்காரின் முன் அங்கீகாரம் பெறவில்லை;

"சுவரொட்டிகளுக்கு எதிராக உருவாக்கப்பட்ட கருத்துக்களை கவனமாகப் பரிசீலித்த பின்னர்தான், சுவரொட்டிகளைத் திரும்பப் பெற சர்க்கார் முடிவு செய்தது; மேலும், மத்திய சர்க்காரிடமிருந்து பணம் கிடைத்தாலன்றி வேறு சுவரொட்டிகள் அச்சிட சர்க்கார் உத்தேசிக்கவில்லை." என்றும் மந்திரி தெரிவித்திருக்கிறார்.

## பஸ் தொழிலாளியின் கண்ணியம்!

பம்பாய் நகரசபை நடத்தும் பஸ் ஒன்றில் ரூ. 1,099 கொண்ட கைப்பை ஒன்று, ஒரு இருக்கையின் அடியில் அந்தப் பஸ் கண்டக்டரால் கண்டுபிடிக்கப்பட்டது; உடனே அவர், அதனை, அலுவலகத்தில் உள்ள இழந்த சாமான்நிலையத்தில்ஒப்படைத்தார்.

அஜ்மீரைச் சேர்ந்த முகம்மது ரம்ஜான் என்பார், 'பை தன்னுடையது' என்று அடையாளம் கண்டு எடுத்துக்கொண்டபோது, கண்டக்டருக்கு ரூ. 20 சன்மானம் வழங்கினாராம்.

நிர்வாகிகள்கூட அந்த 'கண்டக்டரு'க்கு ரூ. 50 கொண்ட பண முடிப்பு வழங்க முடிவெடுத்திருக்கின்றனராம்!

## 8,877 ஜெர்மானியர்

### விடுவிப்பதற்கு ரஷ்யா முடிவு

லண்டன், செப். 28—

ஜெர்மன் குடிமக்கள் 8,877 பேர்களை விடுவித்து, அவர்களை, மேற்கு, கிழக்கு ஜெர்மனிகளுக்கு திரும்ப அனுப்பிவிட ரஷ்யா முடிவு செய்திருப்பதாக சோவியத் செய்தி நிறுவனமான 'டாஸ்' தெரிவித்திருக்கிறதாம்.

## அலகாபாத் மாணவர்கள் ஆர்ப்பாட்டம்

### பல்கலைக் கழகத்தை மூடுவதற்கு எதிர்ப்பு

சத்தியாக்கிரகத்தில் ஈடுபட மாணவர்கள் முடிவு?

அலகாபாத், செப். 29—

அலகாபாத் பல்கலைக் கழக மாணவர்கள் தங்கள் குறைகள் சிலவற்றை நிவர்த்தித்துக் கொள்வதற்காக நேற்று துணைவேந்தர் டாக்டர் பி. என். ஜா இல்லத்தின் முன்கூடி ஆர்ப்பாட்டம் நடத்தியிருக்கின்றனர்; அதன் விளைவாகப் பல்கலைக் கழகம் ஒரு மாத காலத்திற்கு மூடிவிட உத்திரவிடப்பட்டிருக்கிறதாம்.

சென்ற முறை, பல்கலைக் கழக பட்டமளிப்பு விழாவின்போது மாணவர்கள் மேற்கொண்ட ஆர்ப்பாட்டங்களை ஒட்டி எட்டு மாணவர்கள் கழகத்திலிருந்து நீக்கப்பட்டதை எதிர்த்த மாணவர்கள், 'அந்தச் சம்பவம் பற்றி புதியதொரு விசாரணைக் குழு நியமிக்க வேண்டும்' என்று கோரி, ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டிருக்கின்றனர்.

துணைவேந்தர் இல்லத்தில், எழுந்துள்ள புதிய நிலை குறித்து

(தொடர்ச்சி 5-ம் கலம் பார்க்க)

(2-ம் கலத்தின் தொடர்ச்சி.)

ஆராய்வதற்காகப் பல்கலைக் கழகத்தின் அவசர செயற்குழுக் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது, மாணவர்கள் அங்கு கூடி ஆர்ப்பாட்டம் நடத்தியிருக்கின்றனர்; நிலைமை நெருக்கடியாகிவிடவே, போலீசார் வரவழைக்கப்பட்டிருக்கின்றனர்.

இந்த நேரத்தில் செயற்குழு உறுப்பினர்கள் வெளியே வந்து, 'கூட்டம் அமைதியாக நடைபெற மாணவர்கள் ஒத்துழைக்க வேண்டும்,' என்றும், 'மாணவர்களுக்குப் புறம்பாக எதுவும் நடைபெற்றுவிடாது' என்றும், உறுதிமொழி தந்திருக்கின்றனர்; அதன்பேரில் மாணவர்கள் அமைதியாகக் கலைந்துசென்றனராம்.

பின்னர் மாலையில் நடைபெற்ற மாணவர் கூட்டத்தில், துணைவேந்தர் இல்லத்தின் முன் காலை முதல் ஐந்து பேர் கொண்ட 'கோஷ்டி'களாக 'சத்தியாக்கிரக'த்தில் ஈடுபடுவது என்றும் முடிவெடுத்திருக்கின்றனராம்.

மாணவர் செயற்குழுவில் ஒரு உறுப்பினரான, ஜெ. என். ரெய்ஜாதா என்ற மாணவர் தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் இன்று போலீசாரால் கைது செய்யப்பட்டார் என்று தெரிகிறது.

Best copy available.

நம் நாடு
தி. மு. கழகத்தின் இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 30—9—'55 வெள்ளி

# எப்படித் தடுப்பது?

சித்திரையில் பௌர்ணமி—மதுரையில்!

வைகாசியில் விசாகம்—திருச்செந்தூரில்!

ஆனியில் திருமஞ்சனம்—வில்லிபுத்தூரில்!

ஆடியில் பூரம்—இராமேசுவரத்தில்!

ஆவணியில் அவிட்டம்—ஊரெல்லாம்!

புரட்டாசியில் ஏகாதசி—ஸ்ரீரங்கத்தில்!

ஐப்பசியில் தீபாவளி—ஊரெல்லாம்!

கார்த்திகையில் தீபம்—திருவண்ணாமலையில்!

மார்கழியில் திருவாதிரை—தில்லையில்!

தைத்திங்களில் பூசம்—இராமேசுவரத்தில்!

மாசியில் மகம்—கும்பகோணத்தில்!

பங்குனியில் உத்திரம்—பழனியில்!

இப்படி பலப்பல 'திருத் தலங்'களில் ஆண்டு முழுவதும் நடைபெறும் 'உற்சவாதி'கள், தேர் திருவிழாக்களுக்கு மட்டுமின்றி, வீடுகளிலேயே எழுந்தருளியிருக்கும் 'குல தெய்'வங்களுக்கான 'பூசை புனஸ்காரங்'கள், 'விரதங்'கள், 'நோன்பு'கள், 'வேண்டுதல்'கள், விழாக்கள் முதலியவற்றிற்கும், மண விழாக்கள், பிறப்பு-இறப்பு இவற்றிற்கெல்லாம்—'மதச் சம்பிரதாயங்'கள் என்ற பெயரிலும், 'பன்னெடுங் காலப் பழக்க வழக்கங்'கள் என்ற பெயரிலும், இந்த நாட்டு மக்கள், தங்கள் உழைப்பின் விளைவுகளில் பெரும் பகுதியையும், தங்கள் நேரம், நினைப்பு, ஆற்றல், அறிவு அத்தனையையும் பாழடித்து வருவதைத் தடுத்து நிறுத்த வேண்டும்—என்பதை, நாம் பல்காலும் பன்னிப் பன்னிச் சொல்லி வருகிறோம்.

'உலகும், வாழ்வும், இன்பங்களும் மாயமானவை' என்று கூறி, மக்கள் வாழ்க்கையில் பற்றற்றுப்போகச்செய்து, 'நாம் ஏன் வாழ முடியவில்லை' என்பதற்கான உண்மையை அறிந்து கொள்ளவொட்டாது அவர்களைத்தடுத்துவிடுவதுடன், அவர்களுக்குக் கிடைத்துள்ள வாழ்வின் சொற்ப இன்பங் [illegible] யுள்ளன — ஆண்டவர்களும், அவர்களை அடைவதற்கான 'மார்க்கங்கள்' என்று கூறப்படும் மதங்களும், அவற்றின் பெயரால் கற்பிக்கப்படும் சடங்குகளும்!

மக்கள், தங்களுக்குக் கிடைக்கும் சிறிய வருமானத்தின் பெரும் பகுதியை இந்தச் சடங்குகளுக்கும், தேர் திருவிழாக்களுக்கும், விருந்து—வாண வேடிக்கைகளுக்கும் செலவிட்டுப் பாழ்செய்வது—பின்னர் அவதியுறுவது, ஒரு பெருங் கொடுமையுங்கூட!

'இந்த நிலை மாற வேண்டாமா?'—என்ற கேள்வியை நாம்தான் — திராவிடர் இயக்கத்தவர்தான் முதன் முதலில் தென்னாட்டில் எழுப்பினோம்.

இப்போது, காங்கிரஸ் கட்சினர் 'மக்கள் ஆடம்பரமாக மணவிழா, பிறப்பு-இறப்பு தினங்கள் இவற்றைக் கொண்டாடுவதிலும், தேர் திருவிழா, மதச் சடங்குகளை நடத்துவதிலுமாகத் தங்கள் வருமானத்தைப் பாழ் செய்வதைத் தடுத்து நிறுத்த முடியுமா?' — என்பதைக் கண்டறிய, ஒரு துணைக் குழுவை நியமித்துள்ளனராம்.

'மக்கள், அந்த வகையில் பணத்தைப் பாழ் செய்யாமல் சேமித்து வைத்தால், அந்தச் சேமிப்பு, நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தீட்டப்படும் திட்டங்களுக்கான மூலதனமாகப் பயன்பட முடியாதா?'—என்றும் அவர்கள் யோசிக்கின்றனராம்!

ஐந்து நாள் திருமணம், விருந்து - வாணவேடிக்கை, ஊர்வலம், மேளம், நடனம், இன்னிசை—என்று, பணத்தை வாரி இறைப்பவர் இருக்கின்றனர்—அப்படிச் செய்தால் தான் தங்கள் கௌரவத்திற்கும், 'அந்தஸ்திற்கும்' இழுக்கு வராது—என்ற தவறான எண்ணத்தில்!

கோவில், குளம், தேர் திருவிழா, விரதம், காணிக்கை—இவற்றிற்குக் கடன்பட்டும் காசைக் கரியாக்குவர் பலர்!

மக்களில் பெரும்பாலானோர் தங்கள் வாழ்க்கை வசதிக்குக்கூட தங்கள் வருமானத்தைச் செலவிட்டுக் கொள்ளாது, மூடப்பழக்க வழக்கங்களுக்கு அதனை வாரி இறைக்கின்றனர். போராடிப் பெற்ற கூலி உயர்வுகூட, 'ஆண்டவன் அருள்' என்றெண்ணி, கிடைத்த இரண்டணா கூலி உயர்வையும் 'அருள் பாலித்த' ஆண்டவனுக்கு கூடம் கொளுத்தும் நிலையில்தான் உள்ளனர் — தொழிலாளரும், பாட்டாளிகளும்!

இந்த நிலை மாற என்ன செய்ய வேண்டும் என்பதே கேள்வி.

'வருமானத்தைப் பாழடிக்கின்றனர்—தடுக்க வேண்டும் —அவற்றைச் சேமித்து வைக்கச் செய்து அபிவிருத்தித் திட்டங்களின் முதலீடாக்க வேண்டும்'—என்று விரும்பும் காங்கிரசார், என்ன வழிகாணப் [illegible]

மக்களின் கல்வியுள்ள மூட நம்பிக்கையும், அச்சமும் அகற்றப்பட்டாலன்றி, அவர்கள் அந்த மூட நம்பிக்கையாலும், அச்சத்தாலும் விரயமாக்கும் பணத்தை எப்படிப் பாழாகாமல் தடுக்க முடியும்.

சாக்கடையை மூடினாலன்றி அதிலிருந்து கிளம்பும் துர்நாற்றமும், அதில் பிறந்து வளர்ந்து பலருக்கு நோயூட்டும் கிருமிகளும் எப்படித் தடுக்கப்பட முடியும்?

காங்கிரசார், இதனைத் தீவிரமாக சிந்தித்தாக வேண்டும்.

இன்றேல் திட்ட மந்திரி உத்தேசமாகத் தந்துள்ள கணக்குப்படி ஆண்டொன்றுக்கு பாழாகும் தொகை 700 கோடி ரூபாயும், அதற்கு மேலும் தொடர்ந்து பாழாகிக்கொண்டு தானிருக்கும்.

## கட்டவிழ்ந்து விட்டனவாம்!

ஒழுக்க முறைகள் பற்றி நேரு

புதுடில்லி, செப். 28—

"இளைஞர்களிடையே குழப்பமும், கட்டுப்பாடின்மையும் ஏற்பட்டுள்ளதேன்?" என்று, பிரதமர் நேருவிடம் கேட்கப்பட்டபோது அவர் குறிப்பிட்டதாவது:—

"இதற்கு வேலையில்லாத் திண்டாட்டம் காரணமில்லை என நினைக்கிறேன்; இந்தியாவில் ஏற்பட்டுள்ள திடீர் மாறுதலில், சில நியாய முறைகள் திடீரென்று கட்டவிழ்ந்துவிட்டன; ஒவ்வொரு சமூகத்திற்கும் சில ஒழுக்க முறைகள் இருக்கின்றன; அவைகள் மெதுவாகத்தான் மாறும்; ஆனால் நமது பழைய ஒழுங்கு, ஒழுக்க முறைகள் வெகுவாகச் சரிந்துவிட்டன; புதிய முறைகள் துரிதமாக இன்னும் ஏற்படவில்லை."

## விருதுகள் வழங்கியது பற்றி விளக்கம்!

புதுடில்லி, செப். 28—

"சிவிலியன்களுக்கு விருதுகள் வழங்குவது பழைய பிரிட்டிஷ் ஏகாதிபத்திய சர்க்காரின் சம்பிரதாயமாகும்; அந்தச் சம்பிரதாயத்தை புதுப்பிப்பதற்குக் காரணமென்ன?" என்று மக்கள் சபையில் காமத் கேட்டார்.

சர்க்கார் இப்பிரச்சினையை இரு ஆண்டுகள் பரிசிலனை செய்த பின்னர் கலை, விஞ்ஞானம், இலக்கியத் துறைகளில் சிறந்த சேவை செய்தவர்களுக்கு விருதுகள் வழங்குவதென தீர்மானம் செய்ததாக துணை அமைச்சர் தத்தார் கூறினர்.

"பிரதம மந்திரி நேருவுக்கு 'பாரத ரத்ன' பட்டத்தைத் தவிர மற்ற விருதுகள் எல்லாம் மந்திரி சபையைக் கலந்து கொண்டபின்னரே வழங்கப்பட்டது," என்றும் அவர் குறிப்பிட்டார்.

## பாலங்கள் கட்டுவதற்கு ரூ. 2 கோடி அனுமதி

புதுடில்லி, செப். 27—

இரயில்வே 'கதவு'கள் உள்ள இடங்களில் மேம்பாலம் அல்லது கீழ்ப்பாலம் கட்டுவதற்காக உள்ளாட்சிக் கழகங்களுக்குக் கடன் அளிப்பதற்காக ரூ. 2 கோடி இந்திய சர்க்கார் அனுமதித்திருக்கிறதாம்.

நடைமுதல் ஆண்டிலேயே, இத்தொகையில் ரூ. 50 இலட்சம் செலவிடப்படும்; உள்ளாட்சிக் கழகங்களுக்குக் கடன் அளிப்பது பற்றி சர்க்கார், தீவிரமாக யோசனை செய்து வருகிறது.

## கைத்தறித் துணிகள்

'விற்பனைக் கழிவு' வழங்குவதற்கு ரூ. 10 இலட்சம்

ஆந்திர சர்க்கார் ஒதுக்குகிறது

கைத்தறித் துணி விற்பனைக்குக் 'கழிவு' தருவதற்காக 1955–56ம் ஆண்டிற்கு, ஆந்திர சர்க்கார் ரூ. 10 இலட்சம் ஒதுக்கியிருப்பதாக திட்ட மந்திரி காளா வெங்கட்ராவ் தெரிவித்திருக்கிறார்.

"இந்த 'செஸ்' வழங்கும் திட்டப்படி, 14,858 கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவு இயக்கத்திற்குள் கொண்டுவரப்பட்டிருக்கின்றனர்.

இந்தக் கூட்டுறவு இயக்கத்திற்காக ரூ. 3,62,485 முதலீட்டுப் பங்குக் கடனாக 1955 மார்ச் திங்கள் இறுதிவரை சர்க்காரால் வழங்கப்பட்டிருக்கிறது;

"மத்திய சர்க்கார் வழங்கியுள்ள ரூ. 29 இலட்சமும் கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கங்களுக்கு நிதி உதவி தருவதற்கென ஆந்திர மாகில கூட்டுறவு பாங்கியிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது," என்றும் மந்திரி சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

## மேல் சபையில் கேள்வி நேரம்

### காஞ்சீபுரம்—வேலூர் இரயில்வே பாதை

"உத்தேசிக்கப்பட்டுள்ள காஞ்சீபுரம்-வேலூர் இரயில்வே மார்க்கம், அந்தப் பாதையில் அகப்படும் இடங்கள், இவ்வேலையை நிறைவேற்றுவதற்கு ஆரம்பிக்கப்படும் தேதி ஆகியவை, இரயில்வே நிர்வாகிகளால் மேற்கொள்ளப்படும். எஞ்சினீயரிங் போக்குவரத்து 'சர்வே,' சம்பந்தமான அறிக்கைகளைப் பொறுத்திருக்கிறது," என்று அறிவிக்கப்பட்டது.

### ஆரணியாறு திட்டம்

"ஆரணியாறு திட்டத்தை நிறைவேற்றுவதற்கு மூடியூர், மற்றும் இதர கிராமங்களில் காலி செய்யப்பட வேண்டிய நிலத்தின் அளவு 1,046.51 ஏகராக்கள் இருக்கும்," என்று ரெவினியூ மந்திரி கூறியுள்ளார்.

### பள்ளி ஆண்டு ஆரம்பம்: அமைச்சர் தகவல்

"ஜூன் அல்லது ஜூலையில் தற்போது ஆரம்பமாகும் பள்ளிக்கூட ஆண்டை, ஜனவரியிலிருந்து ஆரம்பிக்கலாமா என்பது பற்றிய தங்கள் யோசனை சம்பந்தமாக மாகில சர்க்கார், இன்னும் எவ்வித முடிவும் செய்யவில்லை," என்றும், 'உத்தேசத் திட்டம் பற்றி பல்வேறு கல்வி நிறுவனங்களின் கருத்தை சர்க்கார் எதிர்பார்க்கிறது' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## 80 இலட்சம் சந்நியாசிகள்

இந்தியாவில் உள்ளனர்!

பரோடா, செப். 29—

இந்தியா முழுமையிலும், தற்போது சுமார் 80 இலட்சம் சாதுக்கள் (சந்நியாசிகள்) உள்ளனராம்! நிறுவன ரீதியில், அவர்கள் அனைவரையும் ஒன்று திரட்டுவதற்காக, மத்திய பிரதேச மதத் தலைவரான சாந்த் தர்கோஜி மகாராஜ் என்பவர் முயற்சிக்கிறாராம்; அதற்காக அவர் சுற்றுப் பயணமும் செய்து வருகிறாராம்.

நாட்டில் நடைபெற்றுவரும் நிர்மாணப் பணியில் அவர்களை ஈடுபடச் செய்வதே, அவருடைய சுற்றுப் பயணத்தின் நோக்கமாம்.

## 500 விஞ்ஞானிகள்

இந்தியாவில் உள்ளனராம்!

"இந்தியாவில் 300 முதல், 500 - அணுசக்தி விஞ்ஞானிகள் இருக்கின்றனர்; அவர்களின் தொகை அதிகரித்துக்கொண்டே வருகிறது,"

என்று, டாக்டர் பாபா கூறியுள்ளார்.

"கனடாவிலிருந்து அணு விசை உற்பத்தி இயந்திரம் 1957-க்குள் இந்தியாவுக்கு வந்துவிடும்; இந்தியா தற்போது நிர்மாணித்து வரும் இயந்திரம் 1956-லேயே அலுவல்களைத் துவக்கிவிடும்," என்றும் அவர் கூறியுள்ளார்.

## இனி என்ன குறைவு?

இரயில்வே சிப்பந்திகளுக்கு ஓய்வு விடுதிகளாம்!

"இரயில்வே சிப்பந்திகள் தங்களுடைய விடுமுறை நாட்களை அதிகச் செலவின்றிக் கழிப்பதற்காக விரைவிலேயே மலைப் பிரதேசங்களிலும், கடலோரப் பகுதிகளிலும் ஓய்வு விடுதிகள் ஏற்படுத்தப்படும். குர்சியாங், ராஞ்சி, முசோரி, சென்னையிலுள்ள பல்லாவரம், பரோக் ஆகியவிடங்கள் இதற்காக ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன," என்று, மக்கள் சபையில் அறிவிக்கப்பட்டுள்ளது.

## இரயில்வே வருமானம்

சென்ற ஆண்டைவிட அதிகரிப்பு

புதுடில்லி, செப். 27—

1955 ஏப்ரல் முதல் ஜூலை வரை இரயில்வே வருமானம் சுமார் 102 கோடி என்றும், இதே காலத்திற்கு சென்ற ஆண்டில் ரூ. 93 கோடிதான் வருமானம் வந்தது என்றும், மக்கள் சபையில் கேள்வி ஒன்றிற்குப் பதிலளிக்கையில் இரயில்வே மந்திரியின் செயலாளரான ஷா நவாஸ்கான் தெரிவித்திருக்கிறார்.

ரூ. 6 கோடி, சாமான்கள் போக்கு-வரத்தாலும், ரூ. 2 கோடி [illegible] ரூ. 1 கோடி பிரயாணக் கட்டண விகித ஏற்றத்தாலும், அதிகமான பேர் பிரயாணத்தாலும் இந்த வருமானம் அதிகரிப்பு ஏற்பட்டது என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

## சென்னை - ஆந்திரா பஸ், லாரிகள் போக்குவரத்து

வரி விகிதங்கள் நிர்ணயம்

சென்னை, செப். 28—

சென்னை-ஆந்திரா மாகிலங்களுக்கிடையே ஓடும் பஸ்கள், லாரிகளின் வரி விகிதங்களை நிர்ணயித்து, அதற்கான விதிகளை சென்னை சர்க்கார் வகுத்திருக்கின்றனர். அவ்விதிகள் அக். 1-ந் தேதி முதல் அமுலுக்கு வரும். இரு சர்க்கார்களுக்குமிடையே ஏற்பட்ட உடன்பாட்டின் அடிப்படையில் அவ்விதிகள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன.

## எதிர்ப்புக் குரல் பலனளிக்கிறது!

### பெங்களூர் பால் பண்ணை ஆராய்ச்சி நிலையம் வடநாட்டிற்கு மாற்றப்படமாட்டாது

— விரிவுபடுத்த இந்திய சர்க்கார் திட்டம்

புதுடில்லி, செப். 28—

தென்னிந்தியாவின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக, பெங்களூரில் உள்ள பால் பண்ணை ஆராய்ச்சிக் கழகத்தை முழு வசதிகளுடன் கூடிய ஒரு பிராந்திய நிலையமாக உருவாக்குவதென இந்திய சர்க்கார் முடிவு செய்துள்ளனரென்று, புதுடில்லியிலுள்ள அதிகாரி ஒருவர் தெரிவித்துள்ளார்.

பெங்களூர் ஆராய்ச்சிக் கழகத்தில் தற்போதுள்ள பிரிவுகளான பால் பண்ணை நுண்கிருமி ஆராய்ச்சிப் பிரிவு, பால் பண்ணை இரசாயனப் பிரிவு, பால் பண்ணை தொழில் நுட்பப் பிரிவு, பால் பண்ணை கால்நடை வளர்ப்புப் பிரிவு ஆகியவை, தொடர்ந்து நடத்தப்பட்டு வருமென்பதுடன், அவசியமேற்படும்போது மேலும் பரவலாக்கப்படும். கழகம் இருந்து வரும் கட்டிடத்தை அடுத்துள்ள அதிகப்படியான நிலங்கள், மாகில சர்க்காரிடமிருந்து கிடைத்தவுடனேயே இப்பிரிவுகளில் மேலும் அதிக வசதிகளுக்கு ஏற்பாடு செய்யப்படும்.

### போலி இரயில்வே டிக்கெட்டுகள் விற்பனை

மக்கள் சபையில் தகவல்

புதுடில்லி, செப். 27—

இவ்வாண்டு முதல் 8 மாதங்களில் போலி இரயில்வேடிக்கெட்டுகளை விற்பனை செய்த வழக்குகளில் போலீசார் புலன் விசாரணை செய்து வருவதாயும், ஹௌரா அச்சுக்கூடத்தில் உள்ள சில சிப்பந்திகள் உட்பட பலர் கைது செய்யப்பட்டிருப்பதாகவும், மக்கள் சபையில் தகவல் தரப்பட்டுள்ளது.





## இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்

### பல மாநிலங்களுக்கும் நிதி ஒதுக்கல்

புதுடில்லி, செப். 28—

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ், தேசிய திட்டக் குழு, 23 மாநிலங்களுக்குமாக ரூ. 1993·74 கோடி ஒதுக்கியிருக்கிறது.

இந்த 23 மாநிலங்களுடனும் திட்டக்குழு ஏற்கனவே திட்டம் குறித்து விவாதம் நடத்தியுள்ளது.

இந்தத் தகவலை, திட்ட இலாகா உதவி மந்திரி என். என். மிஸ்ரா இராஜ்யங்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்:—

| | ரூபாய் |
|---|---|
| டில்லி | 18,37,00,000 |
| பம்பாய் | 280,00,00,000 |
| சென்னை | 180,00,00,000 |
| ஆந்திரா | 125,00,00,000 |
| அசாம் | 59,39,00,000 |
| பீகார் | 199,25,00,000 |
| மத்தியப்பிரதேசம் | 125,00,00,000 |
| ஒரிசா | 92,00,00,000 |
| பஞ்சாப் | 134,83,00,000 |
| உத்தரபிரதேசம் | 260,00,00,000 |
| மேற்கு வங்கம் | 161,45,00,000 |
| ஐதராபாத் | 105,00,00,000 |
| பெப்சு | 37,98,00,000 |
| இராஜஸ்தான் | 101,80,00,000 |
| சௌராஷ்டிரம் | 45,00,00,000 |
| ஆஜ்மீர் | 8,26,00,000 |
| போபால் | 17,98,00,000 |
| கூர்ஜரம் | 3,96,00,000 |
| கட்ச் | 8,23,00,000 |
| மணிப்பூர் | 6,26,00,000 |
| புதுச்சேரி | 4,97,00,000 |
| திரிபுரா | 8,91,00,000 |
| வட கிழக்கு எல்லை நிறுவனம் | 10,00,00,000 |
| மத்திய பாரத் (சுமார்) | 70,00,00,000 |

இன்னும் திரு—கொச்சி, மைசூர், இமாசலப் பிரதேசம், விந்தியப் பிரதேசம், ஜம்மு—காஷ்மீர், அந்தமான், நிகோபார் தீவுகள் ஆகியவற்றின் திட்டங்கள் பரிசிலிக்கப்படவில்லை; இவை, வரும் அக்டோபர் திங்கள் மத்தியில் பரிசிலிக்கப்பட்டுவிடும் என்று தெரிகிறது.

இந்த நிதி ஒதுக்கப்பட்டுள்ள மாநிலத் திட்டங்கள் தவிர, மத்திய சர்க்கார் நேரடியாக மேற்கொள்ளும் பல பெரிய திட்டங்கள் வேறு இருக்கின்றன; அவற்றின் மதிப்பு சுமார் ரூ. 2,000 கோடிக்கும் அதிகம்.

## 'எவராயினும் சரி — இந்தியா அனுமதிக்காது'

கோவாவில்நுழைய முயற்சிப்போர் பற்றி நேரு

"கோவா பிரச்சினையில், இந்திய அரசாங்கத்தின் கொள்கைக்கு எதிராக நடந்துகொள்ளுவதற்கு —அவர்கள் யாராயிருப்பினும் சரி—எவரையும் அனுமதிக்கப் போவதில்லை,"

என்று, பண்டித நேரு கிருபர்களிடை பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

கே:—அக். 2-ந் தேதியன்று, கோவாவிற்குள் செல்லவிருக்கும் சத்தியாக்கிரகிகளை, பம்பாய் சர்க்கார் தடுக்குமா?

ப:—பம்பாய் போலீசார், பம்பாய் சர்க்காரின் உத்திரவுப்படி நடந்துகொள்ளுவர்; இந்திய அரசாங்கத்தின் கொள்கையை பம்பாய் சர்க்கார் நிறைவேற்றுவர்.

## உப்பு விலைக் கட்டுப்பாட்டை ரத்து செய்யக் கோரிக்கை

### சுதந்திர அதிகாரமுள்ள 'உப்புக் கழகம்' அமைப்பதற்கு யோசனை

புதுடில்லி, செப். 28—

"உப்பு உற்பத்தியின் இலட்சிய அளவு, தரம், ஏற்றுமதி ஆகியவற்றை நிர்ணயிப்பதற்கு, சுதந்திர அதிகாரமுள்ள ஒரு 'உப்புக் கழகம்' ஏற்படுத்த வேண்டும்," என்று, மக்கள் சபையில் திட்டக் குழு சிபாரிசு செய்திருக்கிறது.

உப்பு உற்பத்திக்கு விஞ்ஞான முறைகளை அக்கழகம் யோசனை கூறும்; உப்பளங்களில் தொழிலாளர்களின் நலன்களைக் கவனித்துக்கொள்ளும்.

அக்குழுவின் அறிக்கையை, அதன் தலைவர் பலவந்த்ராய் மேத்தா மக்கள் சபையில் சமர்ப்பித்தார். அந்த அறிக்கை கூறுவதின் கருத்தாவது:—

"இப்போதுள்ள உப்பு நிறுவனத்தை ரத்து செய்துவிட்டு, அதன் அலுவல்களை வேறு தகுதி வாய்ந்த நிறுவனங்களிடம் ஒப்படைக்கலாம்;

"சர்க்காருக்குச் சொந்தமான உப்பளங்களின் நிர்வாகத்தை லிமிடெட் கம்பெனிகளிடம் ஒப்படைக்க வேண்டும்; வர்த்தக அடிப்படையில் அவைகளை நடத்த வேண்டும்; வியாபாரிகளை பதிவு செய்யும் முறையை ரத்துச் செய்து, அதற்குப் பதிலாக உப்பு விற்பனை பொறுப்பை இந்தக் கம்பெனிகளிடமே ஒப்படைக்க வேண்டும்; உப்புத் தொழிலையே பிழைப்பாகக்கொண்டுள்ள உள்ளூர் வியாபாரிகளுக்கு கஷ்டம் நேரிடாமல் இருக்க பங்குகள் வழங்குவதிலும், உப்பு விற்பனையிலும் இவர்களுக்கு அக்கம்பெனிகள் முதல் சலுகை காட்ட வேண்டும்;

"எதிர்காலத்தில் — சர்க்கார், பெரிய உற்பத்தியாளர்கள், சிறிய உற்பத்தியாளர்கள்—ஆகிய இந்த மூன்று துறைகள் மூலமும் உப்பு உற்பத்திச் செய்வதற்கு முழு வாய்ப்புகள் இருக்க வேண்டும்;

"கிழக்குக் கரையில் புதிய உப்பளங்களை ஆரம்பிக்கலாம்; மேற்குக் கரையிலிருந்து கிழக்குக் கரைக்கு உப்பைக் கொண்டு வருவதிலுள்ள போக்குவரத்து கஷ்டத்தை இதன் மூலம் குறைக்கலாம்.

"உப்பு போக்குவரத்து மீதுள்ள கட்டுப்பாட்டை படிப்படியாகத் தளர்த்த வேண்டும்; உப்பு போக்குவரத்துக்கு இரயில்வேக்கள் முதலிடம் தர வேண்டும்; கரையோரப் போக்கு-வரத்துக் கட்டுப்பாடுகளை ரத்துச் செய்துவிடலாம்.

"சர்க்காரால் நியமிக்கப்படுபவர் மூலம் உப்பு கொள்முதல் செய்யும் முறையை உடனடியாக ரத்துச் செய்ய வேண்டும்;

"நாட்டின் சுயதேவையில், நிர்ணய எல்லையை அடைந்துவிட்டால், உப்பு விலைக் கட்டுப்பாட்டை அகற்றிவிட வேண்டும்; தேவை, விநியோக நிலைமையைப் பொறுத்து விலை நிர்ணயிக்கப்பட்டால், விலை குறைவதற்கு வழியேற்படும்;

"பல்வேறிடங்களில் உப்பு விலை வித்தியாசப்படுவதால், உப்பின் மொத்த, சில்லரை விலைகளை ஆராய்ந்து, நியாய விலைக்கு மக்க[illegible] சார் செய்ய வேண்டும்."

## நாட்டுப் பிரிவினை கோருகிறது நாடு!

### கழக ஆண்டு விழா கொண்டாடினர் திராவிடர்!

★

இத்திங்கள் 17—23-ந் தேதி வரையிலுள்ள ஒரு வார காலத்தைத் திராவிட நாடு பிரிவினை வாரமாகவும், தி. மு. கழக 7-வது ஆண்டு விழாவாகவும் கொண்டு விழா நடத்துமாறு தி. மு. கழகத் தலைமை நிலையம் விடுத்த வேண்டுகோளின்படி, நாடெங்குமுள்ள தி. மு. கழகங்களும், உட்கிளைக் கழகங்களும் விழாக் கூட்டங்கள், ஊர்வலங்கள் நடத்தியும், துண்டுப் பிரசுரங்கள் வெளியிட்டும் கொண்டாடியுள்ளன.

"பிரிந்துபோகும் தனி உரிமையோடு கூடிய தமிழகம்—ஆந்திரம்—கர்நாடகம்(துளுவம் உட்பட)—கேரளம் ஆகிய பகுதிகள், மொழிவழியிலும், தேவையான மாநில உரிமைகள் வழியும் தனித் தனிப் பிரிந்து, வெளிநாட்டு—வடநாட்டுச் சுரண்டல் தடுப்பு, வடநாட்டு அரசியல் ஆதிக்கத் தடுப்பு, வடநாட்டு இந்தி ஏகாதிபத்தியத் தடுப்பு, வாணிபம், போக்குவரத்துப் பற்றுக்கோடுகள், தபால்-தந்தி, உள்நாட்டுப் பாதுகாப்பு, வெளிநாட்டுக் கொள்கை, நாணயச் செலாவணி, இன்னபிற வழிகளில் குறைந்த அளவுத் திட்டத்தில், ஒன்றுபட்ட சுதந்திரச் சமதர்மத் திராவிடக் குடியரசுக் கூட்டாட்சியை அடைய நாம் அனைவரும் பாடுபடுவோமாக"

என்ற தீர்மானத்தையும் அவைகள் ஒரேமனதாக நிறைவேற்றியுள்ளன. நாடெங்கும் நடைபெற்ற மேற்படி விழாச் செய்திகள் சுருக்கமாகக் கீழே தரப்பட்டுள்ளன:—

### பம்பாய்—தாராவி

18—9—55 இரவு 7 மணியளவில், குடியரசு நிலயத்தில், தோழர் சி. த. மு. இர. ஆரிய சங்காரன் தலைமையில் விழாப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ம. இரா. ஏ. ரெத்தினசாமி, என். எஸ். மாடசாமி, எஸ். தங்கையா, சு. தே. இராசையா, மா. அண்ணாமலை, ந. ந. பாலையா, எஸ். தியாகராசன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### இராசபாளையம்

18—9—55ல், இராசபாளையம் தி. மு. க, அதன் உட்கிளையான புதுப்பாளையம் தி. மு. க. சமதர்மப் படிப்பகம் ஆகியவை சார்பில், புதுப்பாளையம் இல்லத்தார் தெருவில் நடைபெற்றது. மாலை 4 மணிக்கு, சமதர்ம படிப்பகத்தின் முன்பாக, ஐம்பது அடி உயரமுள்ள கம்பத்தில், தோழர் சு. தங்கராசு அவர்களால் கழகக் கொடி ஏற்றி வைக்கப்பட்டது. மாலை 8 மணிக்கு, மேற்படி இல்லத்தார் தெருவில், தோழர் எஸ். வீரமணி தலைமையில் விழாப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ஆர். கே. துரை, ஆ. திராவிடமணி ஆகியோர் சொற்பொழிவாற்றினர். இறுதியில் சிறுவர்களுக்குஇனிப்பும் வழங்கப்பட்டது.

### திருத்துறைப்பூண்டி

27—9—55 மாலை 6 மணி அளவில் வாணக்காரத் தெருவிலுள்ள மஜீத் மன்றத் துவக்க விழாவும், திராவிட நாட்டுப் பிரிவினை வார விழாவும் தோழர் பி. எஸ் ஏ. ரகீம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் டி. எஸ். கல்யாணசுந்தரம், என். எஸ். இளங்கோ ஆகியோர் சொற்பொழிவாற்றினர். இறுதியில், மஜீத் மன்றச் சார்பில், தி.மு கழக மாநில மாநாட்டு நிதிக்காக ரூ. 10 நன்கொடை கொடுக்கப்பட்டது.

### புத்திரக்கவுண்டம்பாளையம்

23—9—55ல், தோழர் ர. அ. சுப்பு தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு முக்கிய தெருக்கள் வழியாகச் சென்று அண்ணா மிதி வண்டி நிலயம் வந்து சேர்ந்தது. இறுதியில் சிறுவர்களுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டன.

### புஞ்சைத்தலையூர்

23—9—55 இரவு 8 மணிக்கு தோழர் ப. பெரியசாமி தலைமையில் விழாப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் கா. மு. அனீபா, கே. மைனுமுகம்மது, பி ஏ. பொன்னப்பா ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### தளவாய்புரம்

23—9—55 மாலை 5 மணிக்கு, கழகக் கட்டிடத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, நெடுஞ்செழியன் திடலை வந்தடைந்ததும், நடைபெற்ற விழாப் பொதுக் கூட்டத்தில் தோழர் [illegible] 'நாடும் கொடியும்' என்பது பற்றிப் பேசி, திடலிலுள்ள 60 அடி கம்பத்தில் கொடியேற்றினார். மற்றும் கொமந்தாபுரம் அண்ணா திடலிலும் கொடியேற்றி வைத்தார்.

### மேலப்பாளையம்

23—9—55 மாலை 8 மணிக்கு பசார் மைதானத்தில், தோழர் நா. சங்கரலிங்கம் தலைமையில் நடைபெற்ற விழாப் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ச வீரபாகு, எம். எஸ் இராமசாமி ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### பெங்களூர்-இலக்குமணபுரி

25—9—55 மாலை 5½ மணிக்கு, கழகக் கட்டிடத்திற்கு எதிரில், தோழர் ஏ. டி. பிரான்சிஸ் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் சி வெங்கிடசாமி, கே. ரேணு, ஆர். முனுசாமி, இளஞ்சேரன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### திருமழிசை

24—9—55 மாலை 6 மணிக்கு தோழர் டி. கே. போரூரான் தலைமையில் கிளைக் கழக 2-ம் ஆண்டு விழாவும், தி.மு.கழக 7-வது ஆண்டு விழாப் பொதுக்கூட்டமும் நடைபெற்றது. தோழர்கள் டி. சண்முகம் எம். எல். ஏ., டி. என். சம்பந்தன், ரஷீத், டி. கே. சீனுவாசன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

கூட்ட இறுதியில், மாத்தூர் விவசாயிகளின் போராட்டத்தை ஆதரித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### கிச்சிப்பாளையம் (சேலம்)

25—9—55 மாலை 4 மணியளவில் கழகப் பணிமனையில் தோழர் பி. எம். சிவானந்தம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் பலர் சொற்பொழிவாற்றினர்.

### வடுகபட்டி

சோழவந்தான் வட்டாரத்தைச் சேர்ந்த இவ்வூரில், 25—9—55ல், நடைபெற்றது. தெருக்களிலெல்லாம் தோரணங்கள் கட்டப்பட்டு அலங்கரிக்கப்பட்டிருந்தது. சிறுவர்களுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டன. மாலை கருணாநிதி திடலில், தோழர் எஸ். என். தம்பையா தலைமையில் நடைபெற்ற விழாப் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் வி. கே. ஜி. விந்தன், முகிலன், கோ. வரதன், இன்பசாகரன், என். அண்ணாதாசன் ஆகியோர் பேசினர். தோழர் இரெ. சனார்த்தனம் தி. மு. கழகக் கொடியை ஏற்றி வைத்தார்.

### முகவூர்

22—9—55 இரவு 7 மணிக்கு. கழகக் கட்டிடத்திலிருந்து ஊர்வலம் ஆரம்பித்து பொன் விழா திடல் வந்தடைந்ததும், தோழர் பாலகிருட்டிணன் தலைமையில் விழாப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் [illegible], எம். எஸ். இராமசாமி, [illegible] ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

கூட்டம் முடிந்து வீடு திரும்பிய கழகத் தோழர் ரா. கணக்கன் அவர்கள் சில கம்யூனிஸ்டுத் தோழர்கள் முகத்தில் தாக்கினர். அவர்களை போலீசில் ஒப்படைக்கப்பட்டனர். காயம்பட்ட தோழர் சர்க்கார் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். (ச. - நி)

### மல்லயக்கரை

23—9—55ல், தோழர் ஏ. எஸ். இராமச்சந்திரன் தலைமையில்விழா நடைபெற்றது. தோழர்கள் எம். ஆர். மாணிக்கம், எஸ். ஏ. வடிவேல் எம். ஆர். அண்ணு, டி. இருசப்பன் மற்றும் பல தோழர்கள் சொற்பொழிவாற்றினர். இறுதியில் கிளைக் கழக ஆண்டு அறிக்கை வாசிக்கப்பட்டது. முடிவில் சிறுவர்களுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டன.

## வெள்ளத் தடுப்புக்கு நடவடிக்கை

ரூ. 117 கோடியில் திட்டம்

புதுடில்லி, செப். 28—

14,530 சதுர மைல் பரப்பளவு உள்ள நிலம் வெள்ளத்தால் மூழ்கிவிடாமல் பாதுகாக்கவும், 12 இலட்சம் உணவுத் தானியம் காப்பாற்றப்படவும், இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டத்தில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

ராஜ்யங்கள் சபையில் இதுபற்றி அறிவித்த அமைச்சர் குல்ஜாரிலால் நந்தா, இத்திட்டத்திற்கென இந்தியா, ரூ. 117 கோடி செலவிடுமெனக் குறிப்பிட்டுள்ளார்.

## 'சட்ட விரோதமாக்குக!'

நீதிமன்றத்திற்கு மனு

கராச்சி, செப். 28—

சிந்து சட்டசபை உறுப்பினரான ஜி. எம். புகாரி என்பவர், சிந்து பிரதம நீதிமன்றத்தில், ஒருமுப்புத் திட்டம் சம்பந்தமாக தற்போது பாகிஸ்தானில் நடைபெற்றுவரும் எல்லா நடவடிக்கைகளையும் சட்ட விரோதமாக்கும்படி மனு ஒன்றைத் தாக்கல் செய்[illegible]

## இந்தியா அங்கீகரிக்கிறது

சமீபத்தில் நடைபெற்ற கலகத்திற்குப் பின்னர் ஏற்பட்டுள்ள புதிய அர்ஜெண்டைன் சர்க்காரை இந்தியா அங்கீகரித்திருக்கிறதாம்.

## காஷ்மீரில் பிரவேசித்து சத்தியாக்கிரகம் செய்வர்?

கராச்சி, செப். 28—

'காஷ்மீர் ஹமாரா' கட்சியின் 'ரஜாக்கர்'கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளும் 25 பேர், சிந்து பகுதியைச் சேர்ந்த ஐதராபாத்திலிருந்து புறப்பட்டு, கால்நடையாகவே சென்று காஷ்மீருக்குள் புகுந்து, இந்திய சர்க்காருக்கு எதிராகச் 'சத்தியாக்கிரகம்' செய்ய உத்தேசித்துள்ளனராம்! சிந்து பகுதியின் ஐதராபாத் வீதிகளில், காக்சார் தலைவர் அல்லாமா மஷ்ருகியின் தலைமையில், இவர்கள், ஊர்வலமாகப் பவனி வர்தனராம்!

## ஆசிரியைப் பயிற்சிக் கல்லூரி ஏற்படும்

சென்னை சர்க்கார் திட்டம்

மதுரை, செப். 28—

ஆசிரியைகளுக்கான பயிற்சிக் கல்லூரி ஒன்றை மதுரையில் ஏற்படுத்தும் திட்டமொன்று சென்னை சர்க்கார் பரிசிலனையில் இருந்து வருகிறதாம். நகரின் மத்திய பாகத்தில், ஏற்றதொரு இடத்தைத் தேர்ந்தெடுத்து அறிவிக்குமாறு நகர சபைத் தலைவர் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறாராம்.

இரயில்வே சிப்பந்திகளின் உபயோகத்துக்காக இந்திய இரயில்வேக்கள், நாட்டின் பல்வேறு பகுதிகளில் 74 மருத்துவ மனைகளை நடத்தி வருகிறது.

# சென்னை நகர சபைத் தேர்தல்:

## செல்லுபடியாகாத வாக்குகள் பற்றி கமிஷனர்

சென்னை, செப். 30—

"சென்னை நகரசபைத் தேர்தலில், செல்லுபடியாகாத 'வாக்கு'களின் எண்ணிக்கை 'உச்சநிலை'யில் உள்ளது; மக்களை அது, 'குழப்பத்'தில் ஆழ்த்தியுள்ளது" என்று குறிப்பிட்டிருந்தோமல்லவா? அது பற்றி, சென்னை நகரசபை கமிஷனர் பொதுப்படையாகக் குறிப்பிடுகையில், செல்லுபடியாகாத 'வாக்கு'கள் பற்றி புகார்கள் வந்திருப்பதாகவும், ஆனால், தேர்தல் முடிவுகளை இது எவ்வகையிலும் பாதிக்காது என்றுக் குறிப்பிட்டுள்ளார்.

ஏறத்தாழ தேர்தல் முடிவுகள் எல்லாம் வெளியாகிவிட்டன; சூளை, புளியந்தோப்பு, பெரம்பூர் பாரக்ஸ், செம்பியம், ஆயிரம் விளக்கு, நுங்கம்பாக்கம் ஆகிய தொகுதிகளைத் தவிர, மற்றத் தொகுதிகளிலெல்லாம் குறைந்த அளவுக்குத்தான் வாக்குகள் பதிவாகி உள்ளன.

வாக்குப் பதிவின்றியே தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள 7 காங்கிரஸ்காரர்களையும் சேர்த்துக் காங்கிரஸ் கட்சிக்கு இதுவரையில் 34 இடங்களும், ம. சோ. கட்சிக்கு 2-ம், சோஷலிஸ்டுத் தொழிலாளர் முன்னணிக்கு 4-ம், சுயேச்சையாளர்களுக்கு 19-ம், கம்யூனிஸ்டுகளுக்கு 0-ம் கிடைத்துள்ளன.

கடந்த இரு நாட்களாக நாம் அறிவித்த வாக்குப் பதிவுகளின் எண்ணிக்கையையும், செல்லுபடியாகாத வாக்குகளின் எண்ணிக்கையையும் தொடர்ந்து, மேலும் பல இங்கு தரப்படுகின்றன:—

**41. திருவல்லிக்கேணி**

வாக்குப் பதிவு இருக்கவில்லை. அபேட்சகர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**42. ஜாம் பஜார்**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 14,613 |
| பதிவானது | 7,047 |
| செல்லாதவை | 275 |

**43. மீர்சாகிப்பேட்டை**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 27,744 |
| பதிவானது | 7,955 |
| செல்லாதவை | 721 |

**44. மயிலாப்பூர் (வடக்கு)**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 22,647 |
| பதிவானது | 6,613 |
| செல்லாதவை | 436 |

**46. தேனும்பேட்டை**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 20,145 |
| பதிவானது | 6,954 |
| செல்லாதவை | 289 |

**47. தியாகராயநகர் (தெற்கு)**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 19,519 |
| பதிவானது | 6,095 |
| செல்லாதவை | 436 |

**48. சைதாப்பேட்டை**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 21,829 |
| பதிவானது | 7,728 |
| செல்லாதவை | 342 |

**49. கிண்டி**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 9,990 |
| பதிவானது | 3,760 |
| செல்லாதவை | 286 |

**50. அடையார்**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 19,875 |
| பதிவானது | 6,262 |
| செல்லாதவை | 325 |

★

(இரட்டைத் தொகுதிகள்)

**17. சூளை**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 30,699 |
| பதிவானது | 24,450 |
| செல்லாதவை | 644 |

**18. புளியந்தோப்பு**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 28,125 |
| பதிவானது | 18,238 |
| செல்லாதவை | 715 |

**19. பெரம்பூர் பாரக்ஸ்**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 17 440 |
| பதிவானது | 12,755 |
| செல்லாதவை | 500 |

**20. செம்பியம்**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 21,317 |
| பதிவானது | 13 607 |
| செல்லாதவை | 468 |

**33. ஆயிரம் விளக்கு**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 19,684 |
| பதிவானது | 14,673 |
| செல்லாதவை | 433 |

**34. நுங்கம்பாக்கம்**

| | |
|---|---|
| வாக்காளர்கள் | 15 830 |
| பதிவானது | 10,110 |
| செல்லாதவை | 331 |

# மூடப்பட்ட மருத்துவ மனைகள்

**சுகாதார மந்திரி தகவல்**

சென்னை, செப். 29—

"இரண்டு மருத்துவ மனைகளும், இரு கிராமாந்திர மருத்துவ மனைகளும், கடந்த மூன்றாண்டு காலத்தில் நிரந்தரமாக மூடப்பட்டன,"

என்று, சுகாதார மந்திரி ஏ. பி ஷெட்டி கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

## ரஷ்ய அழைப்பை ஏற்க ஜப்பான் பிரதமர் மறுப்பு

டோக்கியோ, செப். 28—

மாஸ்கோ வருமாறு ரஷ்ய சர்க்கார் அனுப்பியிருந்த அழைப்பை ஜப்பான் பிரதமர் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டிருக்கிறார்.

## சுதந்திரப் போராட்டத்தின் நூற்றாண்டு விழா

புதுடில்லி, செப். 28—

"இந்தியச் சுதந்திரப் போராட்டத்தின் நூற்றாண்டு விழாவை 1957-ம் ஆண்டில் நடத்துவது பற்றி சர்க்கார் ஆலோசனை செய்து வருகிறது," என்று, இராஜ்யங்கள் சபையில் அறிவிக்கப்பட்டுள்ளது.

# 1,438 குடும்பத்திற்கு ரொக்க உதவி

**புது மனைகள் கொடுப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை**

சென்னை, செப் 29—

கீழ்பவானித் திட்டம் கால்வாயிலிருந்து வெளிப்படும் கசிவு நீரினால் கோவை மாவட்டத்தில் கோபி, ஈரோடு, பவானி, தாராபுரம் தாலுகாக்களில் பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு நிவாரணமளித்து, அவர்களைக் குடியமைப்பு செய்ய சென்னை சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர்.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் வசதியான வீடு கட்டுவதற்கு 10-செண்ட் நிலமும், சாதாரண குச்சு வீடுகளுக்கு 5-செண்ட் நிலமும், 6-பேர்களுக்கு அதிகமுள்ள குடும்பங்களுக்கு விலைக்கு மேற்கொண்டு 5-செண்ட் நிலமும்கொடுக்கப்படும்.

## கிராமப்புற ஆசிரியர்கள்...

புதுடில்லி, செப். 29—

கிராமப்புறங்களில், ஆசிரியர்களை, பகுதி நேர வேலை அடிப்படையில் தபால் நிலைய அதிகாரிகளாக நியமிப்பது குறித்து, மத்திய சர்க்கார், மாநில சர்க்கார்களுடன் கடிதப் போக்கு - வரத்து மேற்கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

# இந்தியாவில் மூன்று அணு உலைகள்

**பண்டித நேரு தகவல்**

புதுடில்லி, செப் 28—

"இந்தியா குறைந்தது இரண்டு—அநேகமாக மூன்று அணு உலைகளை, ஆராய்ச்சிக்காக அமைக்கும்,"

என்று பண்டித நேரு பத்திரிகையாளரிடம் தெரிவித்திருக்கிறார்.

"ஒரு உலை ஏற்கனவே கட்டப்பட்டு வருகிறது; 2-வது அமைப்பதுபற்றி யோசித்துக்கொண்டிருக்கிறோம்; இப்போது, மூன்றாவதாகக் கானடாவிலிருந்து ஒரு உலை வருகிறது; இவை எல்லாம் ஆராய்ச்சிக்கான அணு உலைக் கூடங்களாகவே இருக்கும்," என்றும் பண்டிதர் தெரிவித்திருக்கிறார்.

மேலும், ரஷ்யா, தனது அணு சக்தி நிலையத்தைப் பார்வையிட வருமாறு இந்திய நிபுணர்களை அழைத்திருக்கிறது என்றும், அணு சக்தித் துறையில் பயிற்சிக்கான வசதிகள் தர அமெரிக்கா ஒப்பியிருக்கிறது என்றும் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் நேரு தெரிவித்திருக்கிறார்.

# ஆப்பிரிக்கரை காட்டுமிராண்டிகளாக சித்தரிக்கும் அமெரிக்கப் படம்

## டெல்லியில் திரையிடுவதற்குத் தடை

புதுடில்லி, செப். 29—

அமெரிக்காவில் தயாரிக்கப்பட்ட 'தங்க கியாகா' என்ற படம் ஒன்று நேற்று டில்லி படமாளிகை ஒன்றில் திரையிடப்பட்டது.

டில்லி பல்கலைக் கழகத்தில் கல்வி பயிலும் ஆப்பிரிக்க மாணவர்கள் சிலர் அந்தப் படத்திற்கு ஆட்சேபம் தெரிவித்ததை ஒட்டி, டில்லி நீதிபதி, திரைப்பட மாளிகை நிர்வாகிகளுக்கு, 'அந்தப் படத்தைத் தொடர்ந்து திரையிடக்கூடாது' என்று தடையுத்தரவு விதித்திருக்கிறார். தடை இரண்டு மாத காலத்திற்கு விதிக்கப்பட்டிருக்கிறது.

அந்தப் படம் தடை செய்யப்படாதிருந்திருக்குமானால், மேலும் இரண்டு வாரங்களுக்கு அந்தப் படம் ஓடியிருக்கும் என்று தெரிய வருகிறது.

நேற்று திரையிடப்பட்ட அந்தப் படத்தை பகல் காட்சியில் கண்ணுற்ற ஆப்பிரிக்க மாணவர்கள், படம் முடிந்து வெளியே வந்ததும், எதிர்ப்புக் குரல் எழுப்பினர்; நேராக அவர்கள் பண்டித நேருவின் இல்லத்திற்குச் சென்று, அங்கும் எதிர்ப்புக் குரல் எழுப்பியிருக்கின்றனர்; பண்டித நேரு, அவர்களைச் சந்தித்து, அவர்களின் குறையினைக் கேட்டுக் கொண்டார்.

"ஆப்பிரிக்க மக்கள், மனித சமூகத் துவக்கக் காலக் காட்டுமிராண்டிகளாக வாழ்கின்றனர்,' என்று சித்தரிக்கும் திரைப் படங்கள் நல்லன அல்ல; அத்தகு படங்கள் வெளிநாடுகளிலிருந்து இந்தியா வருவதை நாம் அங்கீகரிக்க முடியாது,"

என்று, பண்டித நேரு பத்திரிகையாளரிடம் பேசுகையில், ஆப்பிரிக்க மாணவர்களின் புகார் பற்றிக் குறிப்பிடுகையில் கூறினர்.

"படத் தணிக்கை 'போர்டு' இதுபற்றிக் கவனிக்கும்," என்று, தான் நம்புவதாகவும் அவர் தெரிவித்திருக்கிறார்.

# கழகக் கூட்டங்கள்

★

**மேலூர்**

(சத்திவாக்கம் அடுத்த அத்திப்பட்டு ஸ்டேஷன்)

மண்ணடி திடலில்

2—10—55 மாலை 6 மணிக்கு

தலைவர்: புனிதம் குணசீலன்

பேசுவோர்:

என். வி. நடராசன்

கண்ணதாசன்

ஆ. கிருஷ்ணன்

★

**கொடுங்கையூர்**

மூலக்கடை திடலில்

2—10—55 மாலை 6 மணிக்கு

தலைவர்: மு. ராசன்

பேசுவோர்:

கி. மனோகரன்

சத்தியவாணிமுத்து

★

**சின்னாளபட்டி**

வள்ளுவர் திடலில்

3—10—55 மாலை 6 மணிக்கு

பேசுபவர்:

ஈ. வெ. கி. சம்பத்

★

**திருமங்கலம்**

நகரப் பந்தடித் திடலில்

2—10—55 மாலை 6½ மணிக்கு

தலைவர்: கா. திப்புசுல்தான்

பேசுவோர்:

தில்லை-வில்லாளன்

மு. அப்துல் ரசாக்

பெ. பிச்சை

★

**பரங்கிப்பேட்டை**

தேத்து கடைவீதியில்

2—10—55 மாலை 6 மணிக்கு

தலைவர்: எம். எம். முஸ்தபா

பேசுபவர்:

டி. கே. சீனிவாசன்

★

**காட்டுச்சேரி**

2—10—55 மாலை 6 மணிக்கு, நடைபெறும். தோழர்கள் என். கிட்டப்பா, வி. ஏ. பாண்டியன், சி. ஜம்பு ஆகியோர் பேசுவர்.

★

**பிரிவினை முழக்கம்**

சங்கரநயினார்கோவில்

சுவாமி சன்னதி காந்தி திடலில்

2—10—55 இரவு 7 மணிக்கு

தலைவர்: டி. ஆர். சுப்பிரமணியம்

பேசுவோர்:

ஈ. வெ. கி. சம்பத்

சு. பழனியப்பன்

★

**மாப்பிள்ளையூரணி**

2—10—55 மாலை 5½ மணிக்கு, தோழர் த காசி தலைமையில் நடைபெறும். தோழர்கள் ச. வெ பாண்டியன், இரா. வெட்டும்பெருமாள் ஆகியோர் பேசுவர்.

## சொற் பயிற்சிக் கூட்டம்

30—9—55 மாலை 6½ மணிக்கு, முத்தமிழ் மன்ற மாடியில், (எண் 17, சாலைவிநாயகர் கோயில் தெரு) தோழர் மு. பெருமான் தலைமையில், 'எழுச்சி' என்னும் பொருள் பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

## திரு. வி. க. நினைவு நாள்

1—10—55 மாலை 6½ மணிக்கு சென்னை-சூளை, மாணிக்கச் செட்டித் தெரு, நகர இளைஞர் கழக மனையில், தோழர் கே. சோமசுந்தரம் தலைமையில் நடைபெறும் தோழர் ச. சீனிவாசன் பேசுவார்.

# சி. பி. சிற்றரசு

**சுற்றுப்பயணம்**

செப். 30: கோலார் - தங்கவயல்

அக். 1: பெருந்துறை

2: காலை: மதுரை

மாலை: விருதுநகர்

# பாரதியார்

**வாழ்க்கைத் துணைவியார் இயற்கை எய்தினர்**

'மக்கள் கவி' சுப்பிரமணிய பாரதியாரின் வாழ்க்கைத் துணைவியாரான தோழியர் செல்லம்மாள் பாரதி, நெல்லை மாவட்டம் கடையம் நகரில் இயற்கை எய்தினர் என்பதறிவிக்க வருந்துகிறோம்.

(ஆ - ர்)

# வட ஆற்காடு மாவட்ட தி. மு. கழக (கிளை) செயலாளர்கட்கு

"மாநில மாநாட்டிற்கான நிதி திரட்டுவதற்கென ஒவ்வொரு வட்டத்திற்கும் கீழே குறிப்பிடப்பட்ட தோழர்கள் சுற்றுப் பயணம் செய்ய இருக்கின்கின்றனர்:—

வேலூர்: கருத்தோவியன்; வாணியம்பாடி: ஏ. எல். முனிரத்தினம்; திருப்புத்தூர்: எம். நடேசன், க. நெடுஞ்சோழன்; திருவண்ணாமலை: ப. உ. சண்முகம்; செங்கம்: எஸ். என். ராஜன்; போளூர்: சுப்பிரமணியம்; ஆரணி: கன்னையன்; ஆற்காடு: ஏ. கே. வில்வம்; மற்ற வட்டங்கள்: மாவட்டச் செயலாளர்;

"கிளைக் கழகச் செயலாளர்கள் சுற்றுப்பயணம் செய்பவர்களிடம் நிதியை அளித்து மாவட்டத்தின் பங்கைப் பூர்த்தி செய்ய வேண்டுகிறேன்,"

என்று, வட ஆற்காடு மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் முல்லை சத்தி அறிவிக்கிறார்.

## சென்னை 18-வது வட்ட தி. மு. கழகச் செயற் குழு உறுப்பினர்கட்கு

2—10—55 காலை 9 மணிக்கு, சென்னை 18-வது வட்ட தி. மு. கழகச் செயற் குழுக் கூட்டம் கழகப் பணிமனையில் நடைபெறும்.

## பெங்களூர் — பிளாக்பள்ளி தி. மு. கழகச் செயற் குழு உறுப்பினர்கட்கு

2—10—55 காலை 10 மணிக்கு, பெங்களூர்—பிளாக்பள்ளி தி. மு. கழகச் செயற் குழுக் கூட்டம், கழகக் கட்டிடத்தில் நடைபெறும். அதுபோது, பொதுக்கூட்டம், நூல் நிலைய வளர்ச்சி ஆகியவை பற்றி ஆராயப்படும்.

## தாய்மார் கழகம்

1—10—55 மாலை 3 மணிக்கு, பெத்துநாய்க்கன்பேட்டை தாய்மார் கழகச் சார்பில், மாதத் துவக்கப் பொதுக்கூட்டம் திரு. மயிலை சிவமுத்து தலைமையில் நடைபெறும். திருவாளர்கள் தணிகை உலகநாதர், இ. பக்தவத்சலம், கே. வி. சண்முகம், திருமதிகள் சி எஸ் இராஜேஸ்வரி, வி. பரமேஸ்வரி ஆகியோர் பேசுவர்.

## மைசூர் போலீசார் 'உஷார்'!

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

என்றும், குழுவின் அறிக்கையில் 'பெல்லாரி ஆந்திராவுக்கே' என்ற சிபாரிசு இருக்கும் என அவர்கள் நம்புவதாலும், ஏதேனும் விரும்பத்தாகத நிகழ்ச்சிகளைச் சமாளிக்கவே போலீசார் 'உஷார்' படுத்தப்படுகின்றனர் என்றும் தெரிய வருகிறது.

நாளை முதல் பெல்லாரி நகரை போலீசார் ரோந்து சுற்றுவர் என்று தெரிகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன். எம் ஏ.

